2 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 13 மதுரை 12—4—75 சனி மலர்: 61

பதிவு எண் எம். 8798

## சர்வதேச கொள்ளை

புதுடெல்லி, ஏப். 8—

சர்வதேச எண்ணெய்க் கம்பெனிகளுக்கு 1974-ம் ஆண்டில் ஒரு நாளைக்கு கிடைத்த வருமானம் 43கோடியே80லட்சம் டாலர் (350 கோடியே 40 லட்சம் ரூபாய்) அல்லது ஒரு மணி நேர வருமானம் 1கோடியே 80 லட்சம் டாலர் (14 கோடியே 40 லட்சம் ரூபாய்) அல்லது ஒருநிமிட வருமானம் 3 லட்சத்து 4 ஆயிரம் டாலர் (24 லட்சத்து 32 ஆயிரம் ரூபாய்) ஆகும். இவ்விபரத்தை பிரென்சலாடினா என்ற கியூபா செய்தி நிலையம் அறிவித்தது.

—'எகானமிக் டைம்ஸ்' 9—4—75

## மேற்குவங்க பள்ளிகளில் குண்டர்கள் வரி

கல்கத்தா, ஏப். 8—

மேற்கு வங்கத்தில் உள்ள அசன்சால், பெருலியா என்னும் இரு நகரங்களின் பள்ளிகளில் இறுதியாண்டு தேர்வு எழுதும் மாணவர்கள் ஒவ்வொருவரிடமிருந்து ரூ 10லிருந்து 300 வரை குண்டர்கள் வரி என்னும் வரி வசூலிக்கப்படுகிறது. போலீஸாரின் கையாட்களாக செயல்படும் ஸ்தல சமூக விரோத சக்திகள் தேர்வு எழுதும் மாணவர்களை பலாத்காரமாக வெளியேற்றிக் கொண்டு போய் விடுகிறார்கள். இதனை தடுக்கவே குண்டர்கள் வரி மாணவர்களிடமிருந்து வசூலிக்கப்படுகிறது. இதனை மேற்கு வங்க சட்டமன்றத்தில் கூறிய சுகுமார் பானர்ஜி என்னும் காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர், இதனைதடுக்குமாறும் அரசை வலியுறுத்தினர்.

—'டைம்ஸ் ஆப் இந்தியா' 9—4—75

## சொத்து வேட்டையாடும் சுயநல கட்சியில் கோஷ்டி பூசல் குமுறத்தானே செய்யும்!

# காங்கிரஸ் தலைவர்களின் பதவி சண்டைகள்

# மத்தியிலும் மாநிலங்களிலும் ஊழல் நாறுகிறது

புதுடெல்லி, ஏப். 11—

**எரிகின்ற தீயில் பிடுங்கின மட்டும் லாபம் என்ற முறையில், காங்கிரஸ் ஆட்சியாளர்கள் பதவிப் போட்டிகளிலும் லஞ்ச-ஊழல் போட்டிகளிலும் மூழ்கிக் கிடக்கிறார்கள்.**

**மக்களது நலனை மறந்து, பெருமுதலாளிகளையும் நிலப்பிரபுக்களையும் கொழுக்க வைப்பதையே கொள்கையாகக் கொண்டு கோலோச்சும் ஒரு ஆட்சியில், அந்த பணக்கார வர்க்கங்களின் எச்சில் எலும்புகளைப் பொறுக்குவதிலும், அதிகாரத்தைப் பயன்படுத்தி பொதுச் சொத்துக்களை அபகரிப்பதிலும் கோஷ்டிச் சண்டைகள் தலைதூக்காமல் இருக்குமா?**

நாடுமுழுவதிலும் — அதிகாரத்தில் உள்ள காங்கிரஸ்காரர்கள் மத்தியிலும்— அதிகாரத்தில் உள்ள காங்கிரஸ் காரர்களுக்கும் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் உள்ள காங்கிரஸ்காரர்களுக்கும் மிடையே குடுமிப்பிடிச் சண்டைகள் கோலாகலமாக நடக்கின்றன.

நாட்டு மக்களை பட்டினிபோட்டு, வேலையில்லாக் கொடுமையிலாழ்த்தி, விலைவாசி உயர்வு, வரி உயர்வு கட்டண உயர்வுகளால் வாழ்க்கையையே முறித்துப் போட்டுவிட்ட காங்கிரஸ் ஆட்சியாளர்களின் இன்றைய கொள்கை மாறாத வரையில் நாட்டுக்கு நல்லகாலம் பிறக்கவும் முடியாது. காங்கிரஸ் கட்சி ஒரு ஜனநாயக கட்சியாக ஆகவும் முடியாது.

பெரு முதலாளிகளையும் நிலப்பிரபுக்களையும் வளர்க்கும்போது, அவர்களை வளர்த்து வரும் மந்திரிமார்களுக்கு தாங்களும கோடீஸ்வரர்களாக ஆக வேண்டுமென்ற ஆசை எச்சில் ஊறத்தானே செய்யும்! இந்த ஆசை சிறகடித்துப் பறக்கும்போது காங்கிரஸ் கட்சி ஜனநாயக கட்சியாக எப்படி விளங்க முடியும்? அந்தக்கொள்கையை எதிர்ப்பதற்கு ஒரு சிலர் அக்கட்சியிலும் தலைதூக்குவார்கள் அல்லவா?

### மத்திய அரசிலே...

மத்திய காங்கிரஸ் மந்திரிசபைக்குள்ளேயே அண்மையில் நெருக்கடி ஏற்பட்டது. ஜெயப்பிரகாஷ்நாராயண் ஊழல் ஒழிப்பு போன்ற முக்கியமான பிரச்னைகளைக் கிளப்பியிருப்பதால், அவருடன் பிரதமர் இந்திராகாந்தி கலந்து பேச வேண்டுமென்று வற்புறுத்தியதற்காக, காங்கிரஸ் கட்சியிலுள்ள ஊழல் நாயகர்கள் அத்தனைபேரும கூப்பாடு போட்டு மோகன் தாரியாவின் மந்திரிப் பதவியைப் பிடுங்கி விட்டார்கள் என்பதையும்—தாரியாவைப் போன்று ஊழல் எதிர்ப்பு பேசிவரும் இளம்துருக்கி கிருஷ்ணகாந்த், சந்திரசேகர் முதலியவர்களுக்கும முழுக்கு போட்டு அமுக்கிவிட காங்கிரஸ் பயில்வான்கள் கச்சை கட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

பிரதமர் இந்திராகாந்தியின் மாருதி கார் ஊழல், ஸ்டேட் பேங்கியில் நகர்வாலா மூலம் பணம் எடுத்த ஊழல், செத்துப் போன ரயில்வே மந்திரி எல் என் மிஸ்ரா, காங்கிரஸ் எம் பி துல் மோகன்மூலம் பாண்டிச்சேரி போலிக் கம்பெனிகளுக்கு லைசென்ஸ் வழங்கிய ஊழல் இப்படி ஊழல்கள் மத்திய அரசிலே சுழன்று கொண்டிருக்கின்றன.

### மேற்குவங்கத்தில் நஹார் கலகக் கொடி

மேற்கு வங்கத்தில் மந்திரிகளின் ஊழல்களை எதிர்த்து பிஜாய் சிங் நஹார் என்ற காங்கிரஸ் தலைவர் பிரச்சாரம் செய்து வருகிறார்.

சென்றவாரம் கல்கத்தாவில் ஜெயப்பிரகாஷ் நாராயணை காங்கிரஸ் குண்டர்கள் தாக்கியதை, நஹார் பகிரங்கமாக கண்டித்தார்.

நஹாரின் பேச்சு, யுவகாங்கிரஸ் தலைவர் சுதீப பானர்ஜிக்கு கொதிப்பையுண்டு பண்ணி விட்டதாம். 'ஜெயப்பிரகாஷின் ஏஜெண்டுகளுக்கு காங்கிரஸில் இடமிருக்க முடியாது. ஏப்ரல் 13-ல் நடக்கவிருக்கும மாநில காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்தில் நஹார் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும்' என்று இந்த சுதீப பானர்ஜி முதலமைச்சர் ரேய்க்கு கடிதம் எழுதியிருக்கிறார்.

### அரியானு பன்சிலால்

அரியானு மாநிலத்தில் முதலமைச்சர் பன்ஷிலால் மீது ஊழல் குற்றமசாட்டி காங்கிரஸ் கட்சிக்குள் குழப்படி ஆகிவிட்டது. காங்கிரஸ் எம் எல் ஏ திருமதி சந்திராவதி, பன்ஷிலால் எதிர்ப்புக்கோஷ்டிக்கு தலைமை வகிக்கிறார்.

உடனே இந்த வாரம் சட்டசபைக் கட்சியைக் கூட்டி, 'பன்ஷிலால் மகாயோகியர் அத்தனை பேரும ஆதரிக்கிறோம்' என்று ஒரு தீர்மானமுல் போட்டுள்ளார்கள். ஆனால் சந்ராவதி எதிர்ப்பு தெரிவித்திருக்கிறார். பனஷிலால் ஆதரவாளர்கள சந்ராவதி கூச்சல போட்டு உட்கார வைத்துவிட்டார்கள்.

### மத்திய பிரதேஷில்

மத்திய பிரதேஷிலும் உள்கட்சிக் குமுறல் அதிகமாகிவிட்டது. முதலமைச்சர்சேத்திபாடு சேற்றில் இறங்கியபாடாகி விட்டது.

ஏற்கெனவே ஜபல்பூர் பார்லிமெண்ட் தொகுதியில் காங்கிரஸ் தோற்று விட்டது. மத்தியபிரதேஷில நடந்த 5சட்டமன்றஉபதேர்தல்களில் 3தோற்றுப் போய் விட்டது.

வருகின்ற மேமாதம் 4-ந் தேதியன்று ஜபல்பூர், தாமோ. சிந்துவாரா என்ற சட்டமன்றத் தொகுதிகளுக்கு தேர்தல்நடக்கவிருக்கிறது உள்கட்சிபூசல்களினுல்இந்தத்தொகுதிகளிலும் தோற்றுவிடக் கூடாது என்று இந்திராகாந்தியே நேரில் வந்து மிரட்டிவிட்டுப் போயிருக்கிறார்.

### கர்நாடகத்தில் குஸ்தி

லஞ்ச-ஊழல்களை ஒழிக்க முடியுமா? முடியாதா? — என்ற பட்டிமன்றமே நடத்தி, முஷ்டிகளை உயர்த்தி குத்துச் சண்டைக்கும் தயாராகி விட்டார்கள்.

இம்மாதம் முதல் தேதியன்று பெங்களூரில் நடைபெற்ற கர்நாடக காங்கிரஸ் சட்டசபைக் கட்சியின் கூட்டம் நிகழ்ச்சிநிரலில் கண்ட ஒன்றையும் முடிக்காமல் கூச்சலிலும் குழப்பத்திலும் கோபாவேசத்திலும் முடிந்தது.

முதலமைச்சர் தேவராஜ் அர்சுக்கும், மாநில காங்கிரஸ் தலைவர் கே. எச். பட்டிலுக்குமிடையே வார்த்தைகள் தடித்து, முறைப்புடன் ஒருவரையொருவர் நெருங்கினர். காரியம் மிஞ்சிப் போவதைக் கண்ட கட்சியின் உதவித் தலைவரும், சுகாதார அமைச்சருமான சித்தவீரப்பா ஓடோடி வந்து இருவரையும் விலக்கி விட்டார். இதற்குள் முதல்வர் கோஷ்டியும் தலைவர் கோஷ்டியும் சட்டையை மடக்கி, காய் பாஷையில் திட்டிக் கொண்டு மோதலுக்குத் தயாராஞர்கள்.

தனியார் சொத்துரிமையும் ஜாதீய உணர்வுகளும் நீடிககும் வரையிலும் ஊழல்களை ஒழிக்கவே முடியாது என்று சட்டசபைக் கூட்டத்தில் அர்ஸ் பேசிய பேச்சின் மீதுதான விவாதம் சூடாயிற்று,

அரசு நிருவாகத்தில் லஞ்ச ஊழல் குற்றங்களைப் புரிகின்றவர்கள் மீது மிசா சட்டப்படி நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று எப் எம் கான் என்பவர் எழுதிய கடிதத்தின் மீது அர்ஸ் பேசிய பேச்சும் சூட்டை அதிகரித்தது.

காங்கிரஸ் தலைவர் பட்டீல் எழுந்தார். ஊழலற்ற தூய நிருவாகத்தை நிறுவுவோம் என்று காங்கிரஸ் கட்சி தேசமககளுக்கு கொடுத்த வாக்குறுதியை, அர்ஸின் பேச்சு அவமானப்படுத்தி விட்டது என்றும், கட்சியின் நற்பெயரையே களங்கப்படுத்திவிட்டதென்றும் கடிந்து பேசினர்.

மற்றும் ஒரு பிரச்னையிலும் மோதல் ஏற்பட்டது. தேர்தலில் எந்த அளவுக்கு பணம் விளையாடுகிறதோ அதைப் பொருத்துதான் வெற்றி தோல்விகள் இருக்கின்றன என்ரு அர்ஸ்.

அதையும் எதிர்த்தார் பாட்டீல். 'பணமல்ல முககியம். ஸ்தாபனமும் கட்சி ஒற்றுமையும தான முககியம். வெற்றிக்கு பணம்தான் முக்கியமென்ருல், அநேக உபதேர்தல்களில் ஏராளமாகப் பணத்தைக் கொட்டியும் ஏன் வெற்றிபெறவில்லை?'—என்று மடக்கிக் கேட்டார்.

இதனுல் கொந்தளிப்பு அதிகமாகி, அர்ஸும பாட்டீலும மேலிடத்திடம் புகார் செய்துள்ளார்கள்.

### பகுகுணவை விரட்ட உ பி யில் ஏற்பாடு

உத்தரப்பிரதேஷ் முதலமைச்சர் பகுகுணவை விரட்டியடிக்க, தீவிர முயற்சிகள் நடக்கின்றன.

62 எம் எல் ஏக்கள் கையெழுத்திட்டு 'இந்த பகுகுண ஒழிந்தால்தான் கட்சியும் பிழைக்க முடியும். தேர்தலையும் எதிர்நோக்க முடியும''—என்று பிரதமர் இந்திராவுக்கும் காங்கிரஸ் தலைவர் பருவாவுக்கும், மனுக் கொடுத்திருக்கிறார்கள். இவர்களுக்கு யாஸ்பால் கபூர் தலைவர்.

இதைப பார்த்த பகுகுண ஆட்கள் ஈஸ்வர் சிங் தலைமையில் கூடி, பகுகுண அப்பழுக்கில்லாத சொக்கத்தங்கம். அவர் மீது எங்களுக்கு முழு நம்பிக்கை உண்டு' என்று போட்டி மனு தயாரித்து பருவாவுக்கு அனுப்பியிருக்கிறார்கள்.

இதனுல் உ பி மந்திரிசபையில் பூசல்கள் அதிகரித்து அரசாங்க நிர்வாகமே எந்தவொரு முடிவும் எடுக்க முடியாமல் சந்தேக நிலையில் தொங்கிக் கொண்டிருக்கிறது.

### ராஜஸ்தானில்

ராஜஸ்தான் முதலமைச்சர் ஒரு லஞ்சஊழல்பேர்வழி என்றும் அவரால் காங்கிரசுக்கு களங்கமேற்படுவதாகவும், உடனே இவருக்கு கல்தா கொடுக்க வேண்டுமென்றும மேலிடத்துக்கு காங்கிரஸ் எம் எல் ஏக்கள் மனு அனுப்பியிருக்கிறார்கள்.

### ஆந்திராவில்

ஆந்திராவில் இங்ஙன் முதலமைச்சர் வெங்கல்ராவ் கோஷ்டி, முன்னுள் முதலமைச்சர் நரசிம்மராவ் கோஷ்டி, மத்திய அமைச்சர் பிரம்மானந்த ரெட்டி கோஷ்டி ஆக 3 கோஷ்டிகள் உருண்டு கொண்டிருக்கின்றன.

இதுபோததென்று பழைய சஞ்சீவிரெட்டியும், "நானும கோதாவில் குதித்து விட்டேன்' என்று வந்து விட்டார்.

இப்பொழுது மும்முரமாக சண்டை முதலமைச்சருககும், ஆந்திர காங்கிரஸ் கமிட்டி தலைவருக்கும்தான் சூடாக உள்ளது.

### பீகாரில்

பீகாரில் கபூரை இறக்கி விட்டு செத்துபபோன எல் என் மிஸ்ரா தம்பி ஜகன்னுத் மிஸ்ராவை முதலமைச்சராக ஆக்கியிருக்கிறார்கள். அவரோ 65 பேர்களுக்கு மந்திரிப் பதவி கொடுப்பதாக சைஸ் பண்ணி சந்தடிச் சாக்கில் முதலமைச்சராஞர்.

ஆனுல் 35 பேருக்கு மேல் மந்திரி பதவி கொடுக்க முடியாது என்று இப்பொழுது சொல்கிறார். மந்திரி பதவி கிடைக்காத மற்ற 30 பேர் என்ன ரகளை செய்வார்களோ? போகப் போகத்தான் தெரியும்.

## தொழிற்சாலைகளுக்கு நூறு சதவீத மின்சார வெட்டு

சென்னை, ஏப். 9—

தமிழ்நாட்டில் கடும் மின்சார பற்ருக்குறை ஏற்பட்டுள்ளதன் காரணமாக சிறு தொழில்கள் உள்பட தொழிற்சாலைகள் நாளையிலிருந்து (ஏப் 10லிருந்து) 10 நாட்களுக்கு மின்சாரமே பயன்படுத்தக்கூடாது என உத்திரவிடப்பட்டுள்ளது.

ஏற்கெனவே தொழிற்சாலைகளுக்கு 75 சதவீதமின் வெட்டு இருந்தது. இப்புதிய உத்திரவின் காரணமாக 100 சதவிகித மின்வெட்டு நடைமுறைக்கு வருகிறது.

இம்மின்வெட்டின் காரணமாக கோவை மாவட்டத்தில் உள்ள 95 பஞ்சாலைகள் பெரும் நெருக்கடியை சந்தித்துள்ளன. அவைகளில் வேலைசெய்யும் 56 ஆயிரம் தொழிலாளர்கள் பெரிதும் பாதிக்கப்படுவர்.

இதேநிலைதான் அனைத்து நகரங்களிலும் உள்ள தொழிற்சாலைகளுக்கும் ஏற்பட்டுள்ளன.

பொருட்களை உற்பத்தி செய்வதில் தொடர் வேலைகளைக் கொண்ட தொழிற்சாலைகளுக்கு அவைகளின் நிர்வாகப் பிரச்சினைகளை சமாளித்துக் கொள்ளும் வகையில் 48 மணி நேரமுன்னறிவிப்போடு மின்சாரம் நிறுத்தப்படும் என்று மின்சார இலாகா அமைச்சர் சாதிக்பாட்சா அறிவித்தார்.

## கூலிப்படை உதவித்தளபதியின் பரிதாப முடிவு

சைகோன், ஏப். 9—

தென்வியட்னும்பொம்மை அரசு கூலிப்படையின் உதவித்தளபதியொருவர் தன்னைத் தானே சுட்டுக் கொண்டு தற்கொலை செய்து கொண்டார்.

நிகுயென் வான் ஹியூ என்னும் பெயர் கொண்ட அவர், இன்றிரவு தனது தலைமைக் கமாண்டருடன் யுத்தம் நடத்துவது பற்றி விவாதம் நடததினுர். விவாதம சூடேறி வாக்குவாதமாக மாறிவிட்டது.

வாக்குவாதத்திற்குப்பின் தனது 3வது படை அணியின் அலுவலகத்திற்குச் சென்று ரிவால்வாரால் தனது வாய்க்குள் செலுத்தி சுட்டுக் கொண்டாராம். தற்கொலை செய்துகொண்ட அவர் சாய்வுப் பெஞ்சில் செத்துக் கிடந்தார்.

## விடுதலைப் படைகள் முன்னேற்றம்

சைகோன் ஏப் 9—

தென்வியட்னும் விடுதலைப் படைகள் மேலும் இரண்டு மாநிலத் தலைநகர்களிலிருந்து கூலிப் படைகளை விரட்டியடித்தது. சுயன்லோக், டேன அன என்ற அவ்விரு நகரங்களும் விடுதலைப் படைகளின் கட்டுப்பாட்டிற்குள் வந்துள்ளன.

மேலும் விடுதலைப் படைகள் பான்தீட், தீன் ஜியோ என்னும் இரு நகர்களை குறி வைத்துள்ளன.

### கம்போடியா

கம்போடியாவின் பொம்மை அரசு வான்வழியாக தாய்லாந்தோடுகொண்டிருந்த விமானப் போக்குவரத்தை கம்போடிய விடுதலைப் படைகள் துண்டித்து விட்டன.

தலைநகர் நாம்பென்னைச் சுற்றி விடுதலைப் படைகள் நடத்தும தாக்குதலால் அந்நகரின் ராணுவ விமான நிலையம் கடும சேதத்திற்கு உள்ளாகியுள்ளது.

(8-ம் பத்தி தொடர்ச்சி)

வேண்டிக் கிடக்கிறது? குண்டர்களுக்கு தலைமை தாங்கி சென்ற பெரிய குண்டரை— அந்த மந்திரியை பதவியில் இருந்து டிஸ்மிஸ் செய்து, அவரைத் தண்டிக்க வேண்டும்.

மேற்குவங்கத்தில் அரைப் பாசிச அரசாங்கம் நடக்கிறது என்று நாங்கள்கூறிய குற்றச்சாட்டு இன்று நாடு முழுவதும் அம்பலமாகி விட்டது.

மேற்குவங்கத்தில் மட்டுமல்ல. அரியானுவிலும் இதே போல் எம் எல் ஏ ஒருவரை நிர்வாணமாக்கி தெருததெருவாக ஊர்வலமாக அழைத்துப்போய் அடித்நார்களே போலீசார். அவர்கள் மீது என்ன நடவடிக்கை எடுத்தார்கள்?

கேரளாவிலும் இதே போன்று நடந்தது. ஒவ்வொரு மாநிலமாக இதே அடக்குமுறையும், வன்முறையும் வளர்ந்து வருவது நடைமுறையாகி விட்டது.

இந்த ஆபத்து முறியடிக்கப்பட வேண்டும். இதற்கு அனைத்துக் கட்சிகளும ஒன்றுபட்டுப போராட வேண்டும்.

இந்த அடக்குமுறை ஒழிய வேண்டுமானுல், மக்களின் அடிப்படை உரிமைகளைப் பறிக்கும் அவசர நிலையும், அதற்குப் பின்னே நிற்கும் பாதுகாப்புச்சட்டமும்மிசாவும் ரத்துச் செய்யப்பட வேண்டும். அவசர நிலையை ரத்துச் செய்வதற்காக இயக்கம் நடத்த எந்தக்கட்சியுடனும் சேர நாங்கள் தயாராக இருக்கிறோம்.

கேள்வி: உங்கள் கட்சியே இந்த இயக்கத்தை முன் நின்று நடத்துமா?

பதில் ஜெயப்பிரகாஷ் இந்த இயக்கத்தைத்தான்

(2-ம் பக்கம் பார்க்க)

### காங்கிரசின் ஒரு சில அமைச்சர்களை தனிமைப்படுத்தி தாக்குவதன்மூலம்

# காங்.வுடன் உறவை-நியாயப்படுத்துகின்றனர்

## வலது கம்யூனிஸ்டுகளை அம்பலப்படுத்துகிறார் தோழர் பி. ஆர்.

சென்னை, ஏப். 8—

காங்கிரசில் உள்ள ஒரு சில அமைச்சர்களை மட்டும் தனிமைப்படுத்தி தாக்குவதன் மூலம இந்திரா காங்கிரசுடன் தாங்கள் கொண்டுள்ள உறவை நியாயப்படுதத வலது கம்யூனிஸ்டுகள் நினைககிறார்கள் என்று தோழர் பி ராமமூர்த்தி குற்றஞ்சாட்டினுர்.

கடந்த 5ம தேதி இங்கு நடந்த செய்தியாளர்கள் கூட்டத்தில் தோழர் பி ராமமூர்த்தி பேசினுர். அப்போது, "இந்தியப் பொருளாதாரத்தை மத்திய நிதி அமைச்சர் சுப்ரமண்யமும்தொழில் அமைச்சர் டி ஏ பையும் தான் பிற்போககுத் திசையில் இழுத்துச் செல்கிறார்கள் என்று வலது கம்யூனிஸ்டுக் கட்சி குற்றம சாட்டி இருக்கிறதே'' என செய்தியாளர்கள் கேட்ட கேள்விக்கு பதில் கூறும் போது தோழர் பி ஆர் மேற்கண்டவாறு கூறினுர்.

அவர் மேலும் கூறியதாவது:—

இந்திரா காங்கிரஸ் முற்போககுக் கட்சிதான் என்றும் அதில் ஒருசிலர் தான் பிற்போக்குவாதிகள் என்றும் ஒரு பேர்லித் தோற்றத்தை வலதுசாரி கம்யூனிஸ்டுகள் சிருஷ்டிக்க முயலுகிறார்கள்.

ஆனுல் சுப்பிரமணியமும், டி ஏ பையும் சொல்லும எந்தக் கருத்தும் அவர்களது சொந்தக் கருத்து அல்ல. இந்திராவின் கருத்தைத்தான் அவர்கள் எதிரொலிக்கிறார்கள். இந்திராவே இதை காங்கிரஸ் பாராளுமன்ற உறுப்பினர்களின் கூட்டத்தில் தெளிவாக கூறி விட்டார்.

இந்திராவைத் தாக்க திராணியில்லாத வலது கம்யூனிஸ்டுகள், இந்திரா காங்கிரசுடன் கூட்டுசேராமல்தங்கள் அழிவைத்தடுத்துநிறுத்த முடியாத வலது கம்யூ.கள் சுப்பிரமணியததைத் தாக்குகிறார்கள் இதே சுப்பிரமணியம பெரிய முற்போக்குவாதி என்று 1971ல் வலதுசாரி கம்யூனிஸ்டுகள்தானே பேசினுர்கள்! நாடாளுமன்றத்துக்கும தேர்ந்தெடுத்து அனுப்பினுர்கள்.

கடந்த 27 ஆண்டு கால காங்கிரஸ் ஆட்சியின பொருளாதார கொள்கைகள்தான் காங்கிரஸ் அரசின் அடிப்படைக் கொள்கைகள்தான் இன்றைய கேடுகெட்ட நிலைக்குக் காரணம். இதை மறைதது விட்டு இந்திராவை மறைக்க மாயத்திரை போடுகிறார்கள் வலது கம்யூனிஸ்டுகள் என்று கூறினுர்.

செய்தியாளர்கள் கேட்ட மற்ற கேள்விகளும் பதில்களும் வருமாறு:—

கேள்வி:—

டி ஏ பை கூறியுள்ள புதிய யோசனையை—அதாவது அரசாங்கத் தொழில்களில் பொது மக்களும பங்குகளை வாங்கிக் கொள்ளலாம என்ற யோசனையை உங்கள் கட்சி ஏற்கிறதா?

பதில்: நிச்சயமாக எதிர்க்கிறோம் ஆனுல் இது டி ஏ பை மூளையில் உருவானதல்ல. இந்திராவின் திட்டம். இதை இந்திராவே தெளிவுபடுத்திவிட்டார்.

### ஒன்றுபட்டு போராடவேண்டும்

கேள்வி: கல்கத்தாவில் ஜெயப்பிரகாஷ் தாக்கப்பட்டது பற்றி நீதிவிசாரணை நடததும்படி உங்கள் கட்சி வற்புறுததுகிறதா?

பதில்: நீதிவிசாரணை எதற்கு? அங்கே நடந்த சம்பவம தான் அனைவருக்கும் தெரியுமே!

ஒரு மந்திரியும், ஒரு எம்.பியும் தலைமை வகிக்க காங்கிரஸ் குண்டர்கள் திரண்டு போய் ஜெயப்பிரகாசரைத் தாக்கி இருக்கிறார்கள், போலீஸ் அமைதியாக வேடிக்கை பார்த்திருக்கிறது.

இதில் விசாரணை என்ன

(1ம் பத்தி பார்க்க)

# தீக்கதிர்

## டாட்டாவின் ஓலம்

"ஜனநாயக முறையை மேற்கொள்வதா அல்லது கம்யூனிசத்தை மேற்கொள்வதா என்பதை இந்தியா முடிவு செய்யவேண்டிய தருணம் வந்துவிட்டது".

இவ்வாறு கூறியிருப்பது இந்திரா காந்தியோ அல்லது வேறு அரசியல் கட்சிகளின் தலைவர்களோ அல்ல.

இந்தியப் பொருளாதாரத்தில் பேராதிக்கம் செலுத்தி வரும் ஏகபோகத் திமிங்கிலமான ஜே ஆர் டி டாட்டாதான் இவ்வாறு ஓலமிட்டிருக்கிறார்.

—('தினமணி' 5—4—75)

இந்திய வர்த்தக, தொழில் சபையாரின் கூட்டு ஸ்தாபனத்தின் (அசோசியேட்டெட் சேம்பர்ஸ் ஆப் காமர்ஸ் அண்ட் இண்டஸ்ட்ரீஸ்) ஆதரவில் டெல்லியில் நடந்த கருத்தரங்கில்தான் இந்த 'அரிய பெரிய' ஆலோசனையை 'முக்கிய' வேண்டுகோளை நாட்டுக்குவிடுத்துள்ளார்—நாட்டின் மீதும்மக்கள் மீதும்பாசமும் அக்கறையும் காட்டுகிற டாட்டா.

அவர் இவ்வாறு வேண்டுகோள் விடுத்திருப்பதன் உள்நோக்கம் தான் என்ன?

அவரே இக்கூட்டத்தில் பேசும் போது இறுதியில் கூறியிருப்பதாக 'தினமணி' (5—4—75) யில் குறிப்பிட்டிருப்பதாவது:

'தனியார் தொழில்துறை திறம்படச்செயல்படுவதற்கு தேவையான வசதிகள் தரும்படியும் பொருளாதாரக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தும்படியும் அரசுக்கு திரு டாட்டா வேண்டுகோள் விடுத்தார்."

இப்போது புரிகிறதா?

இந்தியப் பெருமுதலாளிகளின் சிறந்த சேவகயாக உள்ள இந்திரா 'அரசாங்கம், தற்போது அவர்களுக்குச் செய்து வரும் சேவை போதாதாம்.

1947ல் 17 கோடி ரூபாயாக இருந்த டாட்டாவின் சொத்து இன்று 900 கோடி ரூபாய்க்கும் மேல் உப்பியுள்ளதே?

இது எந்தக் கொள்கையின் விளைவு?

டாட்டா விரும்புகின்றரே இன்று இங்குள்ள 'ஜனநாயகம்'—காங்கிரசின் ஜனநாயகம் அந்தக்கொள்கையின் — முதலாளித்துவத்தை மேலும், மேலும் வளர்த்துக் கொண்டிருக்கின்ற அந்த கொள்கையில்லைதானே?

இதைத்திரையிட்டு மறைக்க — மக்களிடையே வளர்ந்து வரும் உண்மையான சோசலிசக் கருத்துக்களைத் திசை திருப்பிவிட — ஆளும் இந்திரா காங்கிரஸ் இடதுசாரி சாகச வேஷங்களில் நடிப்பது—அதன்மூலம்ஏகபோக முதலாளிகளுக்கே 'பேருதவி' செய்து வருகின்றது.

இதனையே வேறு குரலில் ஆளும்வர்க்கங்களின் பிரதிநிதியான டாட்டாவும் கூறுகிறார்: 'இந்தியா மேற்கொள்ள வேண்டியது ஜனநாயக முறையா? அல்லது கம்யூனிச முறையா? என்று முடிவு கட்ட வேண்டிய தருணம் வந்துவிட்டது' என்று!—ஏதோ இந்திய அரசு கம்யூனிச கொள்கையை நோக்கி நடை போடத் துவங்கி விட்டதுபோல்!

"தனியார் பொதுமக்களின் பங்கும் இருக்கும்வகையில் பொதுத்துறை மாற்றி அமைக்கப்பட வேண்டும்" என்று மத்திய தொழில் அமைச்சர் டி. ஏ. பை பேசியிருக்கிறார். அக்கருத்து அரசாங்கத்தின் கருத்துதான் என்று, இந்திரா காந்தி அம்மையாரும் மத்திய அமைச்சரவைக் கூட்டத்திலேயே அடித்துப் பேசியிருக்கிறார். அவர்கள் குறிப்பிடுவது பொதுமக்கள் என்பது யார்? குப்பனையும் சுப்பனையுமா? இல்லையே! டாட்டாவையும் பிர்லாவையும் இதுபோன்ற ஏகபோகக் கும்பலையும் தானே?

இது கம்யூனிச முறையா? இல்லையே.

தற்போது இந்திய வணிக இலாகாச் செயலாளர் விளக்கிக் கூறியிருக்கிறரே புதிய இறக்குமதிக் கொள்கையை!

இதுதான் கம்யூனிச முறையிலான கொள்கையா? இல்லையே!

இந்தப் புதிய கொள்கையை ஏகபோக முதலாளியான கே. கே. பிர்லாவே வரவேற்றிருப்பதிலிருந்து— இதற்கும் கம்யூனிச கொள்கைக்கும் எவ்வளவும் சம்பந்தமில்லை என்பது தெளிவு.

எனவே, டாட்டா வின் விருப்பமெல்லாம் என்ன வென்றால், தற்போது தங்களது சுரண்டல் வேட்டைக்கு இந்திய அரசு அளித்துவரும் சலுகைகளும் வசதிகளும் மேலும் மேலும் அதிகரிக்கவேண்டும்; தாங்கள் தீவிரமாக தங்களது சுரண்டல் தொழிலை நடத்தும் வகையில் மாற்றி அமைக்கவேண்டும் என்பது தான்.

இதனை வெளிப்படையாகக் கூறுவதை விட்டு விட்டு—கம்யூனிச முறையா? ஜனநாயக முறையா?என்று பேசியிருப்பது,'ஆடு நனைகிறதே என்று ஓநாய் அழுத' கதைதானே தவிர வேறென்ன?

## பிரஜா உரிமைகள் பாதுகாப்பு தினம்

மதுரை ஏப் 8—

நாடெங்கும் பிரஜா உரிமைகள் பாதுகாப்பு தினம் கடந்த 6-ந் தேதியன்று அனைத்து எதிர்க் கட்சிகளாலும் அனுஷ்டிக்கப் பட்டது.

அன்று நடந்த பொதுக் கூட்டங்களில், அவசர நிலையை ரத்துச் செய்யும் படியும், 'மிசா', டி ஐ ஆர் போன்ற கருப்புச் சட்டங்களை வாபஸ் பெறும்படியும் இந்திரா அரசை வற்புறுத் தப்பட்டது.

### வேலூரில்

வேலூரில் கடந்த 6-ந் தேதியன்று நடந்த பிரஜா உரிமைகள் பாதுகாப்பு தினப் பொதுக் கூட்டத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் வி பி சி. கலந்துகொண்டு பேசினார்.

அவர் பேசும்போது, தமிழ்நாட்டில் 'மிசா' சட்டத்தில் முதன் முதலாகப் பாதிக்கப்பட்டவன் என்ற போதிலும் எந்தச்சட்டத்தின் கீழ் நான் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டேனே அதே சட்டத்தை எதிர்க்கவேண்டும் குழி தோண்டி புதைக்க வேண்டும் அவசர நிலையை ரத்துச் செய்யவேண்டும் என்று குரல் கொடுக்க முதலமைச்சர் கருணாநிதியும். அமைச்சர் நெடுஞ்செழியனும்முன்வந்துள்ளது கண்டு நான் பெரு மகிழ்ச்சி அடைகிறேன் என்று குறிப்பிட்டார்.

தி மு கழகம் சார்பில் இக்கூட்டத்தில் கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் பேசும்போது சுவர் இருந்தால்தான் சித்திரம் வரைய முடியும் என்றும் எனவே ஜனநாயக உரிமைகளுக்கே ஆபத்து ஏற்பட்டிருக்கிறது, அந்த உரிமைகளைப் பாதுகாக்க கட்சி வித்தியாசமின்றி ஒன்றுபட்டு கிளர்ச்சி செய்யவேண்டும் என்றார். அவரவர்களது கட்சியின் கொள்கைகளும்கோட்பாடுகளும் தனித்தனியாக இருக்கின்றன என்றும் குறிப்பிட்டார். இக்கூட்டத்துக்கு மு. நடராஜன் (தி மு க)தலைமை வகித்தார்.

மற்றும் வே. கண்ணன் (மார்க்சிஸ்ட்) எம், எம் அபிபுல்லா (முஸ்லீக்) வழக்கறிஞர் பத்மநாபன் [சுதந்திரா) சி. கோபால் (குடியரசுக் கட்சி ஒரு பிரிவு) செந்தாமரை (திராவிடக்கழகம) பேசினர். சட்டமன்ற உறுப்பினர் பா. மா. சாரதி தீர்மானத்தை முன்மொழிந்து நிறைவேற்றினர்.

### மேட்டூரில்

மேட்டூர் அணை ஆர் எஸ், எம். டி சி. திடலில் ஒ எம். கிருஷ்ணன் (சோசலிஸ்ட்) தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் வி. ராமசாமி, எம் ராசகோபாலன், வி.எம். நாராயணன் (மார்க்சிஸ்ட்) ஜெயராமன், நஞ்சப்பன் (சோசலிஸ்ட்] சிவசண்முகம்(தி மு க), சண்முகம், லெட்சுமணன் (ஜனசங்) பேசினர்.

### எரியோடு

இங்கு பிரஜா உரிமைகள் பாதுகாப்பு தினத்தையொட்டி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி,தி மு க, மார்க்சிஸ்ட் இளைஞர் மன்றம் ஆகியவற்றின் சார்பில் ஊர்வலமும் அதையடுத்து பொதுக்கூட்டமும் நடந்தன.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் இரா முத்துச்சாமி, ஆண்டிவேலு ஆகியோரும் தி மு க சார்பில் கருப்புசாமியும் பேசினர்.

### போடியில்

இங்கு ஆர்ப்பாட்ட ஊர்வலம் வாரச் சந்தையிலிருந்து புறப்பட்டு, முக்கிய வீதிகள் வழியாக சென்று நான்கு ராந்தலில் நடந்த கூட்டத்தில் சக்கரை [திமுக], எஸ் நடராஜ் (மார்க்சிஸ்ட்), பால் ராஜ்(சிஐடியூ) ஆகியோர் பேசினர்.

### பழனியில்

இங்கும் ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடைபெற்றது. இக்கூட்டத்தில் மார்க்சிஸ்ட் கட்சி சார்பில் வி ஏ கருப்புசாமி, ஏ கே சாகுல்அமீது, நரேந்திரன் ஆகியோரும், தி மு க சார்பில் கே கிருஷ்ணமூர்த்தி, பழனிச்சாமி, சண்முகம் மற்றும் ஸ்தாபன காங்கிரஸ் சார்பில் குருவம்மாள், பச்சநாயகி, முஸ்லிம் லீக் சார்பில் நைனுமுகம்மது,பாரதீய லோக்தளம் சார்பில் ராமச்சந்திரன்ரெட்டியார் ஆகியோர் பேசினர்.

## தொழிற்சங்கத் தலைவர் ஷெரீப் மரணம்

### சிஐடியூ அனுதாபம்

வால்பாறை, ஏப். 8—

வால்பாறையில் செயல்பட்டுவரும் தென்னிந்திய தோட்டத் தொழிலாளர் சங்கத் தலைவர் தோழர் ஷெரீப் அவர்கள் 4 4.75 அன்று பழனியில் மரணமடைந்தார்.

தோழர் ஷெரீப் ஒரு காங்கிரஸ் தியாகி; தேசீய இயக்கத்தில் பங்குகொண்டு தியாகங்கள் செய்தவர். தொழிலாளர் கோரிக்கைகள் விஷயத்தில் காங்கிரஸ் அரசுகளும் ஐ என் டி யூ சியும் அனுஷ்டித்து வரும் கொள்கைகளை எதிர்த்து தனியாக சங்கம் அமைத்தார். மிகவும் தாழ்த்தப்பட்ட— நசுக்கப்பட்ட தோட்டத் தொழிலாளரின் மேம்பாட்டுக்காக சென்ற 25 வருடங்களுக்கு மேலாக தொழிற்சங்க சேவை செய்தார்.

சி ஐ டி யூ தோன்றிய பிறகு, குறிப்பாக வால்பாறையில் சி ஐ டி யூ சங்கம் ஆரம்பிக்கப்பட்ட பின், அதன் நேர்மையான கொள்கைகளால் ஆகர்ஷிக்கப்பட்டு, எல்லா போராட்டங்களிலும் அதனுடன் பூர்ணமாக ஒத்துழைத்தார். தன்னுடைய தள்ளாத வயதின்போதும் தோட்டத் தொழிலாளர் நலன்களுக்காக பாடுபட்டு வந்தார்.

அவருடைய மரணம் தொழிற்சங்க இயக்கத்துக்கு குறிப்பாக தோட்டத் தொழிலாளர் இயக்கத்துக்கு பெரும் நஷ்டமாகும்.அவரை இழந்து நிற்கும் குடும்பத்தினருக்கும் சங்கத்துக்கும் சி ஐ டி யூ தன் ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவித்துக் கொள்கிறது என்று சி ஐ டி யூ தமிழ் மாநிலக் குழுவின் தலைவர் தோழர் கே ரமணி அறிவிக்கிறார்.

(நமது நிருபர்)

## 'காம்ரேட்' (நாவல்) வெளியீட்டு விழா

சென்னை ஏப் 7—

மாவீரன் பகத்சிங்கின் தோழரும் புகழ்பெற்ற இலக்கியவாதியுமான யஸ்பால் இந்தி மொழியில் எழுதிய 'காம்ரேட்' எனும் நாவலை சென்னை கார்க்கி பதிப்பகம் (8, ஜோனகன் தெரு, சென்னை 600028) மூன்று ரூபாய் விலையில் வெளியிட்டுள்ளது.

லெனின் பிறந்த நாளை [ஏப் 22) முன்னிட்டு இதன் வெளியீட்டு விழா கடந்த 5-ந் தேதி நடந்தது.

### கே முத்தையா தலைமையில்

இதற்கு, 'செம்மலர்' ஆசிரியரும் முற்போக்கு எழுத்தாளர் சங்க அமைப்பாளருமான தோழர் கே முத்தையா தலைமை வகித்தார்.

1942—46 காலகட்டத்தில், நாட்டின் விடுதலைக்காக நடந்த இயக்கங்களில பங்கு கொண்ட வீரர்களைப் பற்றிய நாவல் இது.

எவ்வாறு, கீதா என்ற ஒரு கம்யூனிஸ்ட் பெண் தனக்கு ஏற்பட்ட பழிகளையும், தூற்றல்களையும், அவதூறுகளையும எதிர்த்து நின்று நாட்டு விடுதலை இயக்கத்தில் அக்கறையில்லாத ஒரு முரடனைக் கூட நாட்டுப்பற்றுள்ளவனுக் ஆக்குகிருள் என்பதே இந்த நாவலின் கருப்பொருள்.

இந்த சிறந்த நாவலை தோழர் கே முத்தையா வெளியிட்டுஒவ்வொரு கம்யூனிஸ்டும்தேசபக்தனும்படிக்க வேண்டிய அரிய இலக்கியம் என்று குறிப்பிட்டார்.

### வி பி சிந்தன்

இப்படிப்பட்ட நாவல்கள் பல வெளியிடப்பட்டு, சுதந்திரப் போராட்ட காலத்தின் உண்மைகளை மக்களுக்கு எடுத்துக் கூற வேண்டும் என்று தோழர் வி பி சிந்தன் குறிப்பிட்டார்.

மாதர் சங்க மாநில துணைச் செயலாளர் தோழர் மைதிலிசிவராமன், எழுத்தாளர் தோழர் ச செந்தில்நாதன் ஆகியோர் இந்த நாவலை வரவேற்றுப் பேசினர்.

## அஞ்சல் ஊழியர் சங்கம் புதிய நிர்வாகிகள்

செங்கற்பட்டு, ஏப். 8—

அகில இந்திய அஞ்சல் ஊழியர்கள் சங்கத்தின் செங்கற்பட்டு கோட்டக் கிளையின் ஆண்டுவிழா இங்குள்ள தலைமை அஞ்சலகத்தில் நடந்தபோது புதிய நிர்வாகிகள் தேர்வு நடந்தது.

தலைவராக ஆர். ஏழுமலை, துணைத் தலைவர்களாக ரெங்கபாஷ்யம், புண்ணியகோட்டி, செயலாளராக கே எம் சக்ரபாணி,துணைச் செயலாளர்களாக டி. வி. சண்முகம், பி. கிருஷ்ணன், பொருளாளராகவரதராஜன் துணைப் பொருளாளராக ஏ. நடராஜன், அமைப்புச் செயலாளர்களாக விகுப்புசாமி, டி தாமஸ் மற்றும் எட்டு செயற்குழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

அகில இந்திய பொதுச் செயலாளர் தோழர் ஆதிநாராயணா, மாநிலச் செயலாளர் தோழர் குருபாதம் ஆகியோர் தலைமையில் தொடர்ந்து இயங்குவது என்று இந்த ஆண்டு விழாவில் உறுதி எடுத்துக் கொண்டனர் அனைத்து ஊழியர்களும்.

## இப்போது சாத்தியமின்றி போனதேனோ?

புதுடெல்லி, ஏப். 9—

குஜராத்தில் தேர்தல்நடத்துவதற்கான அனைத்து ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. ஆனல் தேர்தல் நடத்துவது சாத்தியமல்ல என்று இப்போது கூறுகிருர்கள் என குஜராத்தில் உடனடியாக தேர்தல் நடத்தக் கோரி உண்ணுவிரதம் இருக்கும் மொரார்ஜி தேசாய் நிருபர்களிடையே கூறினர்.

குஜராத்தில்மே மாதத்தில் தேர்தல் நடத்த சாத்தியம் உள்ளது என தேர்தல் கமிஷன் அறிவிக்குமானல் உண்ணுவிரதத்தை கைவிடுவீர்களா என நிருபர் ஒருவர் கேட்டபோது பதில் அளித்த மொரார்ஜிதேசாய், 'தான் அதை ஒப்புக்கொள்ள முடியாது என்றும் ஏற்கெனவே குஜராத்தில் தேர்தல் நடத்துவதற்கான அனைத்து நடவடிக்கைகளும் முடிக்கப்பட்டன தேர்தல் அதிகாரிகள் கூட நியமிக்கப்பட்டனர். ஆனல் இப்போது மே மாதத்தில் தேர்தல் நடத்த சாத்தியமில்லை என்று கூறுவது ஏற்றுக் கொள்ளக் கூடியதல்ல என்று அவர் தெரிவித்தார்.

## கேரள கூட்டணி அரசு மெஜாரிட்டியை இழந்துவிட்டது —தோழர். இ. எம். எஸ்.

திருவனந்தபுரம், ஏப். 8—

கேரள காங்கிரஸ்-வலது கம்யூனிஸ்ட் கட்சி தலைமை கூட்டணி 1970-ம் ஆண்டில் மக்களிடமிருந்து பெற்ற தீர்ப்பு முடிந்து விட்டது மக்களின் புதிய தீர்ப்பை பெறுவதைத் தவிர வேறுமாற்று வழியில்லை என மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பொலிட் பீரோ உறுப்பினர் தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட் குறிப்பிட்டார்.

இதுதான் கேரளத்தின் இன்றைய உண்மையான பிரச்சினை என்றும் இவ்வுண்மைப் பிரச்சினையை, சம்பிரதாய மெஜாரிட்டியை ஏற்படுத்துவதாக திட்டமிட்டு வர்ணிக்கப்படுகிறது என்றும் தோழர் இ. எம். எஸ். குற்றஞ்சாட்டினர்.

கடந்த பட்ஜெட் கூட்டத்தின்போது கூட்டணி கட்சியில் ஒன்ருன முஸ்லீம் லீகின் பெரும்பாலான சட்டமன்ற உறுப்பினர்கள் சட்டமன்றத்தை பகிஷ்கரித்த போதே கூட்டணி அரசு தனது மெஜாரிட்டியை இழந்துவிட்டது என்றும் அவர் குறிப்பிட்டார்.

முஸ்லீம் லீக்கின் மீது அதிருப்தியுற்ற சட்டமன்ற உறுப்பினர்கள் 6 பேரும் கட்சி தாவிகள் அல்ல என்றும் ஏனென்றல் அவர்களின் அதிருப்தியும் அதன் தொடர்ச்சியான நிகழ்ச்சிகளும் ஆளுங் கூட்டணி பற்றிய கட்சியின் அணுகு முறையில் ஏற்பட்டவையே என்றும் தோழர் இ. எம். எஸ். சுட்டிக்காட்டினர்.

## கூலிப்படைகள்பற்றி அமெரிக்க செனட்டர்கள் கருத்து

வாஷிங்டன், ஏப். 8—

அமெரிக்காகொடுத்த ஆயுதங்களையெல்லாம் பறிகொடுத்து விட்டதாலும், இருந்த பகுதிகளிலிருந்து முறையில்லாமல் ஓடி வந்து விட்டதாலும் அமெரிக்காவின் புதிய உதவிக்கான சந்தர்ப்பத்தை தென்வியட்னும் பொம்மை அரசும் அதன் கூலிப் படைகளும் இழந்து விட்டன என்று அமெரிக்க செனட்டர்கள் கூறியுள்ளனர்.

புதிதாக கூடுதலானஉதவிகள் அளிப்பதால் கூலிப் படைகள் பலநூறு கோடிக் கணக்கான டாலர் மதிப்புள்ள ஆயுதங்களை பறிகொடுப்பதையும், இருக்கும் பகுதிகளிலிருந்து ஓடி வருவதையும் தடுத்து நிறுத்த முடியாது என ஒரு செனட்டர் கூறினர்.

பெண்களையும், குழந்தைகளையும், அலட்சியப்படுத்துவதில் தென்வியட்நாம் (கூலி)படைகள் மிருகங்கள் போல் நடந்து கொள்கின்றனர்என ஒருஜனநாயக கட்சி செனட்டர் குறிப்பிட்டார்

## இ. காங்கிரசுடன் உறவை நியாயப்படுத்துகின்றனர்....

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இந்தியா முழுவதும்நடத்துகிருர். எங்கள் கட்சியும் அதில் சேர்ந்து இருக்கிறது.

தமிழ்நாட்டில் இந்த இயக்கத்தில் கலந்து கொள்ளும் படி எல்லாக் கட்சிகளுக்கும் எங்கள் கட்சி சார்பில் கடிதம் எழுதினேம். காமராஜரை நேரில் சந்தித்துக் கேட்டோம். அவர் பொறுத்துப் பார்க்கலாம் என்று முதலில் கூறினர். இப்போது தனியாக அவர்கள் கட்சியும் கூட்டம் நடத்துகிறது அதில் நான் பேசுகிறேன்.

### தேர்தல் வரட்டும் பார்ப்போம்

கேள்வி: தேர்தல் கூட்டணி சம்பந்தமாக உங்கள் கட்சி ஏதாவது கட்சியுடன் தொடர்பு கொண்டதா?

பதில்: முதலில் தேர்தல் வரட்டும். அவசரநிலை இருந்தால் தேர்தல் எப்படி நடக்கும். அதனல்தான் அதை ரத்து செய்யச் சொல்கிரேம். அவசர நிலை ரத்து செய்யப்பட்டால்தானேதேர்தல் நடக்கும் என்ற உத்தரவாதம் இருக்கும்!

இந்தியப் பாதுகாப்புச் சட்டத்துக்கு இன்று என்ன அவசியம்? பாகிஸ்தான் யுத்தம் 13 நாளில் முடிந்து பங்களாதேசமும் உருவாகி விட்டது பின்னர் ஏன இந்தப் பாதுகாப்புச் சட்டம்? எதிர்க் கட்சிக்காரர்களை எல்லாம் சிறையில் அடைக்கவா? இந்திய பாதுகாப்பு சட்டம் இந்திரா பாதுகாப்புச் சட்டமாக அல்லவாமாறிவிட்டது.

### ஜே பி யும்-இந்திராவும் சந்தித்தால் மட்டும் பிரச்னை தீர்ந்து விடுமா?

கேள்வி: இந்திராவும் ஜெயப்பிரகாஷரும் சந்தித்துப்பேச வேண்டும் என்று மத்திய மந்திரி மாளவியா கூறி இருக்கிருரே!

பதில்: சந்திப்பதால் மட்டும் என்ன பலன் கிட்டி விடப் போகிறது. காங்கிரஸ் ஆட்சியின் அடிப்படைக் கொள்கைகள் தவருனவை. அது மாருதவரை இந்தச் சந்திப்பினல் என்ன பலன் கிட்டி விடும்?

கேள்வி: கேரள நிலை பற்றி......

பதில்: கேரளத்தில் முஸ்லிம்லீக் கூட்டணியுடன் சேர்ந்து போட்டியிட்டதன் மூலம், முஸ்லிம் மக்களின் ஆதரவுடன்தான் கேரள கூட்டணி ஆட்சிக்குவந்தது. முஸ்லிம் லீக் மெம்பர்கள் பெரும்பகுதியினர் அரசுக்கு ஆதரவை திரும்ப பெற்றுக்கொண்டதால் கேரள அமைச்சரவை இனியும் நீடிப்பதில் எந்த நியாயமும் இல்லை.

கேள்வி:—தனிப்பட்ட ஒருவர் கட்சி மாறினல்...

பதில்:—தனிப்பட்டவர் கட்சி மாறினல் அவரது எம் எல் ஏ அல்லது எம் பி பதவியை தானகவே அவர் இழக்கும வகையில் சட்டம் கொண்டுவர வேண்டும் என்று எங்கள் கட்சி வற்புறுத்துகிறது.

கட்சிமாறலைத் தடுக்கும் மசோதா பற்றி சர்வ கட்சித் தலைவர்கள் ஆலோசனையை மத்திய அமைச்சர் சவாண் கேட்டபோது இதைத்தான் நான் கூறினேன். அவர் இதை கடுமையாக எதிர்த்தார். வலது கம்யூனிஸ்ட் தலைவர் பூபேஷ்குப்தாவும் எதிர்த்தார்.

மேலும் தேர்ந்தெடுக்கப் பட்ட பிரதிநிதிகளைத் திருப்பி அழைக்கும் உரிமை மக்களுக்கு வேண்டும் என்றும் எங்கள் கட்சி வற்புறுத்துகிறது.

## பஞ்சாப் மாநில காங்கிரசுக்குள்ளும் மோதல்

சண்டிகார், ஏப். 8—

இந்திரா காந்தியின் திருப்புதல்வன் சஞ்சய் காந்தியின் மாருதி கார் கம்பெனிக்கு இடம் பிடித்துத் தருவதில் தன் 'திறமை'யைக் காட்டிய ஹரியானு முதல் அமைச்சர் பன்சிலாலுக்கு எதிராக காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்கள் போர்க்கொடி உயர்த்தியுள்ளனர்.

திருமதி சந்திராவதி என்னும் சட்டமன்ற உறுப்பினர் இசகோஷ்டிக்குதலைமை வகிக்கிருர்.

பன்சிலால் பின்னல் அனைத்து சட்டமன்ற உறுப்பினர்களும் அணிவகுத்து ஒற்றுமையாகஇருக்கவேண்டும என்பது கட்சியின் கட்டளை என்ருலும் சந்திராவதி அம்மாளின் கோஷ்டியினர் பன்சிலால் மீது நம்பிக்கையின்மையை வெளியிட்டுள்ளனர். புதிய முதல் அமைச்சருக்கான தேர்தல் நடத்தப்பட வேண்டும் எனக் கோரியுள்ளனர்.

அம்மாநிலத்தின் ரோரி, மேஹெய்ன் என்னும் இரு சட்டமன்ற தொகுதிகளில் நடைபெற்ற உபதேர்தலில் அவ்விரு தொகுதிகளில் எதிர்க்கட்சியினர் வெற்றி கொள்ள பன்சிலாலும் அவரது கோஷ்டியினருமே காரணம் என்றும் சட்டமன்றத்துக்குள்ளும் சரி,வெளியேயும் சரி அவர்களின் நடவடிக்கைகள் தோல்வியுற்றனஎன்றுமகுற்றம் சாட்டுகின்றனர்.

இக்குற்றச்சாட்டுகளை கடந்த சனிக்கிழமை நடந்த காங்கிரஸ் சட்டமன்றக்கூட்டத்தின் போது திருமதி சந்திராவதி வெளியிட்டுள்ளார்.

## கல்கத்தா தமிழ் மன்றத்தில் பாப்பா உமாநாத்

கல்கத்தா, ஏப். 7—

இங்கு கடந்த மார்ச் 28, 29, 30 தேதியில் நடந்த மேற்குவங்க ஜனநாயக மாதர் சங்க மாநாட்டில் கலந்து கொள்ள வந்திருந்த தமிழக ஜனநாயக மாதர் சங்கச் செயலாளர் தோழர் பாப்பா உமாநாத், தென்கல்கத்தாவில் உள்ள தமிழ் மன்றம், பாரதி தமிழ்ச்சங்கம் ஆகியவற்றின் சார்பில் கூட்டாக நடந்த கூட்டத்திலும் கலந்து கொண்டு பேசினர்.

மார்ச் 29ந் தேதி நடந்த இக்கூட்டத்தில் 'சர்வதேச பெண்கள் ஆண்டும், இந்திய பெண்களின் இன்றைய நிலையும்' என்ற பொருளில் பேசிய அவருக்கு மன்றத்தின் சார்பில் சில புத்தகங்கள் அன்பளிப்பாக அளிக்கப்பட்டன.

'பொறுத்தது போதும் பொங்கியெழுவோம்' என்ற மாதர்சங்க வெளியீட்டை மன்றத்துக்கு பாப்பா உமாநாத் அளித்தார்.

மன்றத்தின்சார்பில்குமாரி வனஜா, திரு இராமன் ஆகியோர் வரவேற்று பேசினர்.

## நியாய விலைக் கடையில் மோசடி? ஆர்ப்பாட்டம் செய்த 28 மார்க்சிஸ்டுகள் கைது

கல்லுப்பட்டி, ஏப்.7—

திருமங்கலம் தாலுகா வன்னிவேலம்பட்டியில் அரசு நியாய விலைக்கடையில் கோதுமைக்கு அரசு நிர்ணய விலையைவிட கூடுதலான பணம் மக்களிடம் வாங்கப்பட்டதை எதிர்த்து ஆர்ப்பாட்டம் செய்ததற்காக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சித் தோழர்கள் தாக்கப்பட்டுள்ளனர். மேலும் இது பற்றி புகார் கொடுக்கச் சென்றவர்கள் மீதே வழக்கும் தொடுத்துள்ளனர் போலீசார். இந்த அக்கிரமம் கடந்த 4-ந் தேதி நடந்துள்ளது.

இந்தக் கடையில் ஒரு கிலோ கோதுமை ரூ 1-43 என்று பில் போட்டுக் கொண்டு, ரூ 1-55 வசூலிக்கப்பட்டதாம். தவிர அதற்கான ரசீதும் மக்களுக்குத் தரப்படுவது இல்லையாம். எனவே இந்த அக்கிரமம் குறித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட, அதிமுக தோழர்களிடம் பொதுமக்கள் முறையிடவே, அவர்கள் நியாய விலைக் கடையின் கோட்டாதாரரிடம் எடுத்துக்கூறினர். அவர் கேட்க மறுக்கவே, சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் புகார் கூறினர்.

இக்கடையின் கோட்டாதாரர் தி மு க வைச் சேர்ந்தவர் என்று கூறப்படுவதால் அதிகாரிகளும் போலீஸ் இலாகாவும் நடவடிக்கை எடுக்கவில்லையாம்.

எனவே, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, அதிமுக ஆகிய கட்சிகளின் ஊழியர்கள் ஆர்ப்பாட்டம் செய்யவே ஆத்திரமுற்ற கடைக்காரர்கள் முன்னேற்பாடாயிருந்த கையாட்கள் மூலம் படிக்கல், தராசு முதலியவற்ருல் தாக்கிப் படுகாயப்படுத்தினராம்.

இதுபற்றி போலீசில் புகார் கொடுக்கச் சென்றபோது, புகார் மனு கிழித்து எறியப்பட்டு, மார்க்சிஸ்ட் தோழர்கள் 28 பேரும் கைது செய்யப்பட்டு வழக்கும் தொடுக்கப்பட்டுள்ளனர்.

### லாக்-அப்பில் இருந்தவனை ஏவி தாக்குதல்

மேலும் இந்தச் செய்தியை கூறுவதற்காக திருமங்கலத்தில் உள்ள, தாலுகா கமிட்டி அலுவலகத்திற்குச் சென்று விட்டுத் திரும்பிய தாலுகாக் கமிட்டி உறுப்பினர் ஐ. முனியாண்டியை போலீஸ் ஸ்டேசனில் போலீஸ் பாதுகாப்பில் லாக்அப்பில் அடைத்து வைக்கப்பட்டிருந்த கூட்டுறவு பால் வழங்கும் சொசைட்டி பணியாளர் பரமன் என்ற நபரையும் வேறு சிலரையும் ஏவி தாக்கச் செய்தனராம். இதனல் தோழர் முனியாண்டியின் மண்டை உடைந்து ரத்தம் கொட்டியது.

### முதலமைச்சருக்கு உ. ச. உலகப்பா தந்தி

இவ்வாறு போலீசார் ஒருதலைபட்சமாக நடந்து கொண்டது குறித்தும் இது குறித்தும், இதுசம்பந்தப்பட்ட அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்கக் கோரியும் ஏற்கனவே ஊழலில் திளைத்துப் போயிருந்த கூட்டுறவு பால் வழங்குசொசைட்டிக்கு கோதுமை விநியோகம் செய்ய மீண்டும் அனுமதி அளித்திருப்பதை மாற்றக் கோரியும் முதலமைச்சருக்கு கட்சியின் தாலுகாச் செயலாளர் தோழர் உ. ச. உலகப்பா விபரமான தந்தி ஒன்று அனுப்பியுள்ளார்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில்(6-16 பைபாஸ் ரோடு, மதுரை 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.